# சமர்ப்பணம்

நீரே மலையாய் நேரநீள் நிலத்தே
நோய் விதையை நிறுத்தப் பணித்தான்
மண்மீ துள்ள மக்கள் உறவினர்
மனத்தகம் பொங்கிட வாழ்த்து மொழிகள்
யாவுமே தகையா லடுத்த தண்ணீர்
மலையான் கொண்ட மதிதிரு நெல்லையும்
இன்பமே பேசுன ரென்றால், அன்பரே!
இந்நாள், அன்னவர் ஈன்ற ரத்தினந்தனை
அருள்வாய்ப் பாவல ரன்பார் நாவலர்
சக்தி தியாகனே! சந்திரக் கதிரே!
சித்தனே! பாருயர் வித்தனே! என்ன
இத்தகை மொழியா லிசைத்த பொக்கிஷம்
சத்தியப் பாரிலே தங்கிட
சித்தமு முணர்வும் சுத்தமுட னுவந்தேன்.

அன்பன்,

**N. R. பத்மநாபன்,**

உதவி ஆசிரியன், 'விஸ்வபந்து'
காரைக்குடி.

காரைக்குடி,
22-3-39.

# முகவுரை

செல்வன் தியாகராஜன் ஜன்மதினப் பூர்த்தி முன்னிட்டு இவ்வெளியீடு பிரசுரிக்கப்பெறுகிறது. இதில் தமிழ்நாட்டில் சிறந்த அறிவாளிகளும் புலவர்களுமாக விளங்கும் பெரியார் பலர் தங்கள் ஆசி மொழிகளை இன்பம் ததும்பும் இனிய சொற்களால் வியப்புறும் தன்மையில் உரைத்துள்ளார்கள்.

பெரியார் உரைகள் என்றுமே பொய்ப்பதில்லை. அதிலும் அவர்கள் அருள்சுரந்து மொழியும் சொற்கள் உண்மையானவையாகவே சம்பவிக்கும் என்பதற்கு சரித்திரம் சாட்சி.

தந்தையும் தாயும் எவ்வழியோ, அவ்வழி தனையன் என்பது பண்டைய அமுதமொழி. கடவுளால் எல்லா மக்களும் ஒரே தன்மையரான ஆற்றல் பெற்றவர்களாக இயற்கையில் சிருஷ்டிக்கப்பெற்றும், அவ்வாற்றலை விகசிக்கச்செய்யும் முயற்சிகளில் பெற்றோர்கள் ஈடுபடாததால், குழந்தைகள் அவ்வாற்றல்களை வளர்ச்சிபெறச்செய்யும் வசதியின்றி அறிவீனர்களாகப் போகின்றார்கள்.

ஆனல் நம் தியாகராஜனின் பெற்றோர்களான அன்பர் ஸ்ரீ தண்ணீர் மலையான் செட்டியாரும் ஸ்ரீமதி திருநெல்லை ஆச்சியரும் இயற்கையிலேயே பொதுநல ஆர்வ

மும் சீர்திருத்த உணர்ச்சியும் கொண்டவர்களாகவிருக்கின்றார்கள். அவற்றைச் செயலில் காட்டியும் வருகின்றார்கள். குழந்தையைச் சீரிய முறையில் வளர்க்க வேண்டும் முறைகளையும் உணர்ந்துள்ளார்கள்.

எனவே, எதிர்காலத்தில் நம் சிறுவன், தியாகம் சிறந்த வாலிப வீரனாக விளங்குவான் என்பது உறுதி.

ஆதலால், தியாகராஜன் எனும் பெயர் பெற்றுள்ள இச்செல்வச் சிறுவன் தமது பெயருக்கு ஏற்ப தியாக சிந்தனையுடன் பொதுநல வாழ்க்கையிலும் சிறப்பாக தாய்த் திருநாட்டின் உயர்பணியிலும் ஈடுபட்டு பல்லாண்டுழைக்கவும் திடவாழ்க்கையும் நிறைந்த செல்வங்கள் பலவும் நீண்ட ஆயுளும் பெற்றிடவும் இறைவனை இறைஞ்சுகின்றோம்.

16—3—1939
காரைக்குடி.

தி. ம. நடராஜன். B. Sc. A.
ஆசிரியர் "விஸ்வபந்து"
&
முனிசிபல் கவுன்சிலர்

திருவளர் செல்வன்



# கதிரேச - தியாகராஜன்

பிறந்த தினம்

தாது பங்குனி 28

உ

சிவமயம்

# வாழ்த்துப் பாக்கள்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்
(Professor of Tamil, Annamalai University)
**மகிபாலன்பட்டி, பண்டிதமணி**
**திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள்**
**இயற்றியது**

[எண் சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்]

மாவளருங் காரைநகர் வணிகர்திரு மரபில்
வருதண்ணீர் மலையாற்கு மனையறத்தின் மிக்க
பூவளருஞ் செல்விநிகர் திருநெல்லை யம்மை
புரையில்தவப் பயனாகப் பெற்றவெழிற் புதல்வன்
தூவளருங் கதிரேசதி யாகராஜப் பேர்த்
தோன்றலுயர் வாணாளும் பிணியறியா வுடலும்
நாவளருங் கலையறிவும் உடையவனாய் வாழ்க்கை
நலம்பெறச் செய்தருள்கவென நம்பனைவாழ்த்
துதுமே.

திருச்சேந்தூர்

## வித்வான் ஸ்ரீ. மு. கிருஷ்ண சர்மா அவர்கள் பாடியது

தாதுவாம் ஆண்டு தகுபங் குனித்திங்கள்
தீதிலமா வாசை திரவாரம்—ஆதியசேர்
மங்கலநாட் டண்ணீர் மலைதிருநெல் லைத்தாய்க்கு
நங்கள்கதி ரேசன்வரு நாள்.

வள்ளல்களாய செல்வர்கள்பலரும் வாழ்ந்திடு காரைமா நகரில்
உள்ளமுமொழியும் தூயவனாய உவமையி லிராமநாதற்கும்
வள்ளியம்மையெனும் கற்புடையாட்கும் வாய்ந்தநற்புதல்வி யாய்த் தோன்றும்
ஒள்ளியசீர்த்தித்திருநெல்லைஆய்ச்சிஉயர்புகழ்கூறுதற்பாற்றே

பாரதநாட்டின் உரிமையைநாட்டப் பற்பல சொற்பொழி [வாற்றி
சீரியகல்வி நிலயமும்பலவாம் செந்தமிழ் வாசகசாலை
நேரியசங்கம் பற்பலதிறந்து நிலையுறும் பெரும்புகழ்கொண்ட
பூரணமதிநேர் முகத்திருநெல்லை புகழறியாதவர் எவரே.

சகுந்தலைதனக்கு வாய்ந்ததுஷ்யந்தன் தகைநிகர் தகைமிக உடையான்
மிகுந்தனத்தண்ணீர் மலையினனெனும்பேர் மேவியசுப் பிர மணியன்
தகுஞ்சிறப்புடைய சுப்ரமண்யற்குந் தன்மனையா முண்ணு முலைக்கும்
சகம்புகழ் புதல்வ னாகவந்துதித்துச் சான்றவராற் சொலப் பெறுவோன்.

அத்தகைத்தண்ணீர் மலையினனுக்கும் அன்புறு
திருநெல் லைதனக்கும்
புத்திர னாகவந்தவதரித்த புண்ணிய
னங்கதிரேச (ச் செல்வ) ன்
இத்தலமிசைப்பொன் பொருள் அனம்ஆடை இனையன
ஈதலாற்றளராச்
சித்தமதுடையான் தியாகத்தின் மிகையால் தியாகராஜப்
பெயர் பூண்டோன்.

பொன்னினிப் பெறுதற் கறிகுறியாகப் பொருந்திய
தாதுவாண்டினிலும்
வன்மைமிக்குடைய பங்குனன்நிகர வளர்தலாற்
பங்குனிதனிலும்
நன்மலர்மாலை வெற்றியாற் பெறற்கு நலன்பெறும்
அந்திமாலையிலும்
புன்மையில் சீர்க்கோல் போல்நடுநிலைமை பொருந்தலாற்
றுலா இலக்கினத்தும்.

நிலைபெறுபுகழைச் சேர்வதால் அலையா
நீர்த்திரவாரநா ளினிலும்
கலைநிறைமதிபோல் களிப்புறச்செயலால் கதிர்மதி
இலக்கினத் தினிலும்
விலையிலாமணிபோல் வருகதிரேசன் மேதினி
மீதுபல் லாண்டு
நிலவிவீற்றிருந்து நீடுவாழ்தற்கு நினைகுவேம்
முருகனதடி யே.

செந்தமிழ்நாட்டுச் செல்வர்கள் பல்லோர்
திகழ்குவார் பெருமனை காண்பார்
உந்துவான் பல*கார் கொள்ளுவார் தத்தம்
உடலுறும்இன் பமேகருதிச்

---

* கார்—மோட்டார்கார்

சிந்துவார் பொருளீ நாட்டினுக் குழைக்கத்
திடனுறுமனத்தி னெடுக்கி
முந்துவார்தண்ணீர் மலேயினர் போலும்
முதல்வனேயா மறிந்திலமே.

ஆடவர்க்கானில் அரக்கர்பேய் வந்தாங் கச்சமுற்
றுளமிக நடுங்கி
ஓடியோனும் மடந்தையர் போலா துயரியோர்
சொற்பொழி வாற்றும்
மேடைமீதினிலும் மாசபைதனிலும் விளங்குறச்
சொற்பொழி வாற்றும்
பீடுடைக்கற்பிற்றிருநெல் லேஎன்னப் பிறங்குவோர்
ஓர்சிலர் தாமே.

இத்திருநெல்லே ஆய்ச்சியைப்போன்றுர் எழிலுறும்
செட்டிமார் நாட்டில்
புத்திமிக்குடைய மங்கையர்சிலர் சொற்பொழிகுவா
ராயிடில் அன்றே
எத்திசையுள்ள மக்களும் வியப்ப எங்கள்தம்
நாடுமுன் னேறி
வித்தையில் அறிவில் முயற்சியிலெல்லாம் விரைந்துயர்ந்
தோங்கிடு மன்றே.

நினேவினல் மொழியால் தூயவனுந்தன் னீர்மலேயான்
நனிவாழ்க
புனேயிழைநல்லார் தங்கட்கோர் அணியாம்
புகழ்த்திருநெல் லேயும்வாழ்க
மனேயறம்பேணும் இனேயர்தம் மகவாம்
வளர் கதிரேச னும் வாழ்க
இனேவில்செந்தமிழும் சைவமும் நாடும்யாவரும்
இனிது வாழியவே.

தமிழ்நாட்டுத் தேசீய சித்திரக் கவி

## நாமக்கல்

## திரு. வெ. இராமலிங்கம் பிள்ளையவர்கள்

இயற்றிய

## பஞ்சரத்தினம்

திருநெல்லை ஆச்சியரும் திருத்தண்ணீர் மலையானும்
சேர்ந்த வாழ்வில்
வருநல்லக் 'கதிரேசன்' வளர்மதிபோல் வடுவின்றி
வளர்ந்து நாளும்
பெருநல்லச் செல்வமெலாம் பெற்றுசுகம்
உற்றுபழி பிறங்கிடாமல்
ஒருநல்ல மகனெனவே உற்றவரும் மற்றவரும்
உவக்க வாழ்வான்.

தாய்முத்துப் பட்டினத்தில் தனவணிகத் திருத்தண்ணீர்
மலையான் வீட்டில்
ஆய்முத்துப் பந்தரின்கிழ் ஆச்சியுடன் ஐயாவும்
அமரச் சூழும்
தூய்முத்துப் பல்துலங்கக் களிசிறக்கும் சுற்றத்தார்
தொழுது வாழ்த்த
வாய்முத்தம் கோடிபெறும் தன்மகனைத் திருநெல்லை
மடிமேல் வைத்து.

ஆண்டுநிறைத் திருநாளில் அவரவர்கள் தவப்பயனை
அளந்து செய்கைத்
தூண்டுநவக் கிரகமெலாம் 'கதிரேசன்' துணையாகத்
தொடர்ந்து காக்க

ஆண்டுபல பல்லாண்டு அவனுக்கு ஒரு குறையும்
அணுகாதென்றே
வேண்டுகிற பலபேர்கள் விரும்புகிற படிபலவாம்
வேள்வி யோங்க.

மந்திரங்கள் சிலர்ஜெபிக்க மாகதர்கள் துதிபாட
மாசு நீக்கும்
தந்திரங்கள் சிலர்பேசத் தருமநெறி பலர்கூறத்
தான மீந்து
வந்தவர்க்கும் மற்றவர்க்கும் வரிசையினல் பரிசுபல
வழங்க ஆங்கே
செந்திருவும் 'கதிரேசன்' செனனத்தால் திருநடனம்
செய்வாளென்போம்.

ஏழைகளுக் குபகாரி எளியவருக் கிரங்கும்குண
எழிலானென்று
சூழுறவில் பலபேர்கள் சுற்றுகின்ற பெருமையினைச்
சூடி நாளும்
தாழறிவும் தருக்குரையும் தன்னகமும் தானென்றும்
தரியாணுகி
வாழியநம் 'கதிரேசன்' வமிசமெலாம் இமிசையற
வாழவேண்டும்.

சாணக்கிய சூத்திரகாவியம் இயற்றியவரும்
தமிழ்ப் புலமையிற் சிறந்தவருமான

கோட்டாறு

**ஸ்ரீ நீ. கணபதி ஆச்சாரியார் குமாரர்**

வித்வான்

# G. சுவாமிநாத ஆச்சாரியாரவர்கள்

## இயற்றியது

சீரார் முத்துப் பட்டணத்தில் திருவார் தண்ணீர்மலைவேளும்
தாரார் குழலி திருநெல்லைத் தாயுந் தவத்திற் பெற்றமகன்
ஏரார் செல்வன் கதிரேசன் எவரும் போற்ற வந்துதித்த
ஆரா வமுத மனையான்பல் லாண்டு வாழ்க வாழ்கவே.

பத்தி பெருகு மடியவர்க்கும் பன்னூல் கற்ற பண்டிதர்க்கும்
தத்தி அலையும் எளியவர்க்கும் தழைத்து வளரும் கற்பகம்போல்
நித்த முதவு நிதியாளன் நேசன் தண்ணீர் மலையண்ணல்
சித்தம் மகிழ முத்தமிடும் சிறுவன் வாழ்க வாழ்கவே.

தாயின் மடிமீதிருந்து மெல்லத் தவழ்ந்து தந்தை மடியேறி
வாயி னமுதம் வடிந்தொழுக மழலை மொழிகள் சிலகூறி
ஆயும் மகிழ்ச்சி யீன்றவருக் களித்துப் பிறைபோல் வளர்ந்துவரும்
சேயெம் மழகன் கதிரேசன் தினமும் வாழ்க வாழ்கவே.

உண்ணுந் தந்தை முகம்நோக்கி ஊர்ந்துசென்று பொன் செய்த
கிண்ணத் துணவைச் சிறுகையால் கிண்டிய ளேந்து கிட்டரிய
விண்ணி னமுத மிதுவென்ன விரும்பியருந்தச் செய்மதலே
எண்ணற் கரிய செல்வமெலாம் எய்தி வாழ்க வாழ்கவே.

தந்தையுந் தாயுந் தனவணிகர் தங்குலமும்
சந்ததம் செய்யுந் தருமமெலாம்—மைந்தன்
கதிரேச னுக்குரிய காவலாய் நின்று
நிதமுமே காக்கும் நிலத்து.

---

காரைக்குடி சைவ சித்தாந்தச் செல்வர்

## ஸ்ரீலஸ்ரீ ராம. சொ. சொக்கலிங்க ஐயா அவர்கள் மாணக்கர்

## ஸ்ரீ. ந. ப. ராம.

## திருநாவுக்கரசு செட்டியார் அவர்கள்

## ஆக்கியது

தனவணிகப் பெண்களிலே தைரியமாய் முன்னம்
மனமுவந்து சீர்திருத்த வாழ்க்கை—வினயமுடன்
செய்துவழி நாட்டுந் திருநெல்லை! பெண்களினம்
உய்யவழி செய்வாய் உவந்து.

மாசறுதண் ணீர்மலைக்கும் மாதுதிரு நெல்லைக்கும்
பேசுறுநற் றவப்பேற்றாற் பிறந்தமகன் தியாகேசன்
தேசுறவே பலசெல்வச் சீமானாய் என்றென்றும்
தேசநலம் புரிவீர சிகாமணியாய்ச் சிறந்துவாழ்க!

காரைக்குடி தமிழ்ப் பண்டிதர்

## ஸ்ரீ சு. சிதம்பரமய்யரவர்கள் இசைத்தது

---

சீர்பூத் தெழுந்த காரைநகர் செழிக்க வளரும் வணிகர்களில்
ஏர்பூத் தெழுந்த பரம்பரையில் இனிதே வருந்தண் ணீர்மலை
யாள்
கார்பூத் தெழுந்த மலரெனவே நனிவாழ் மகளாந் திருநெல்லை
பார்பூத் தெழுந்த தவப்பயனால் பெற்றார் பாலன்றனையவரே.

செய்ய தாது வருடமதிற் சேர்ந்த பெருநாட் பங்குனியில்
துய்ய வாரத் திரமுடனே தோன்று மிருபா னெட்டாநாள்
வெய்யபகலோன் மதிதனையே மேவுஞ்சுபமார் தினத்திரவில்
பய்யன் பிறந்த பொழுதமைந்த பண்பார் ஓரை பகர்துலையே

துலையிற் பிறந்த சேய்தனக்குச் சுடரு மதியும் மீனத்தும்
கலையிற் சிறந்த புதசுங்கர் களிப்பாய் மேட மதில் விளங்க
அலையிற் பிறந்த வமுதடைந்த அரவுஞ் சேயுந் தேள்சிகிகோ
நிலையிற் சிறந்த குருநீலன் மகர கும்பம் நின்றனரே.

நின்ற கோளின் றகைமையினால் முன்னாட் புரிந்த நெடுந்
தவத்தால்
வென்ற வேலோன் அருள்கிடைக்க மேலு மேலும்
வளர்வுற்றுக்
கன்ற மனத்தார் உறவகற்றிக் கனியு மனத்தார் தமைப்
பொருந்தித்
துன்று பலநூற் கேள்வியுடன் றொல்லோர் போற்ற
வாழ்வானே.

பிறந்த பாலன் நோயின்றிப் பெற்றோர் மற்றோர் மகிழ்வெய்த
மறந்த பணிகள் உலகியற்ற மகிழ்வாய் நூறாண் டினிதிருக்கச்
சிறந்த நாமம் கதிரேசத் தியாக ராச னெனச்சொல்ல
அறந்த வாத நிலைமை யொடும் அரனார் அவனைக் காப்பாரே.

தேவகோட்டை, வித்வான்

## சொ. வேலுச்சாமிக் கவிராயர்

### இயற்றியது

---

பாருலகி லோங்குபுகழ் படைத்ததன வணிகர் நிறை
சீருலவு காரைநகர் சேருமுத்துப் பட்டணத்திற்
பேருலவு பட்டினத்தார் பெருங்குலத் தண்ணீர்மலையான்
ஏரிலகு கற்புமனை திருநெல்லை யெனுமிவர்கள்

முன்புபுரி தவப்பயனால் வந்துதித்த மூதறிஞன்
இன்பமுறு கதிரேச தியாகராசனுக் கிந்நாள்
அன்புமிக நன்குபுரி சஷ்டியப்தபூர்த்திச் சிறப்பை
பொன்போலும் பேரறிஞர் புகல்வதன்றி யார்புகல்வார்!

பழக்கமுறு நண்பர்முதற் பகுதியினர் யாவரையும்
அழைத்தருமை யுடன்மகிழ்வாய் ஆற்றியப்த பூர்த்திதனைத்
தழைக்கமனம் யாவர்களும் தக்கவா றுபசரித்து
மழைப்புயல்போற் பரிசுபெறு வார்க்கிந்நாள் நனிவாழி!

---

ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவர உயர்தர வித்தியாசாலை
தலைமைத் தமிழாசிரியர் (காரைக்குடி)

## திரு. ப. மாசிலாமணித்தேசிகரவர்கள்

## இயற்றியது

---

[பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.]

உலகுசீ ரேறுதண் ணீர்மலை யடுத்து ச்செழித்துவந் தின்புறு
புலமார்
உருவளர் நெல்லையின் பாலுரு த்துயர்ந்து பெருகொளி
வாய்ந்திள மணியாய்
நிலவுறு செஞ்சடை யண்ணலை யிடத்து மருவு மெந்தாய்தரு
வலமார்
நிமலவே லாயுதன் மஞ்ஞைகுக் குடமூர் வதுகொடி
கொள்தமிழ் முருகன்

குலவருள் கூடிட த்தாதுபங் குனிரே வதியமை வாரமுந்
திரமாம்
குருமனை மீன்மதி லக்கினம் பிறப்பு வணிகனும் மாலைவந்
துதித்த
கலங்கடற் பார்கதி ரேசனற் றமிழார் தியாகரா சன்னென
வெவரும்
கருதிரு மைபெற ச்செய்தன கடமை யியலுற வாழிபன்
னெடுநாள்

---

## தேவகோட்டை பாலகவி
## வயிநாகரம்
# வே. இராமநாதன் செட்டியாரவர்கள்
## பாடியது

---

திங்க ளுலவும் பொழுதினிலே திகழு மாட முடிதடவித்
தங்கு மகிழ்மிக் களித்துயருந் தகைசேர் காரைத் திருநகரத்
துங்க வணிகர் குலத்திலொரு தூயோன் தண்ணீர் மலை
யென்பான்
பொங்கு கீர்த்தி பெற்றுயர்ந்தான் புகலு முத்துப் பட்டினத்
தான்.

அன்னோன் றனது மனைக்கிழத்தி யானு ளறிவின் மிக்குயர்ந்
தாள்
தன்னு லியன்ற பலபணிகள் தழைக்கப் புரியும் பெற்றியினுள்
பொன்னூர் திருவின் பொற்புடையாள் புகழுந் திருநெல் லைப்
பெயராள்
இன்னோ ரிருவர் செயுந்தவத்தா லினியமகவாய் வந்துதித்
தான்.

தாது மீன நாலேழிற் சனிவா ரத்தில் வந்துதித்த
தீதில் சீர்த்திக் கதிரேசத் தியாக ராஜச் செல்வனுக்கு
ஓதும் ஆண்டு நிறைநாளில் உயர்ந்தோர் பலசொல்
லாசியுடன்
காதற் புதுமை விழாநடத்திக் களித்தார் குழந்தை
கவினுறவே.

ஆண்டு நிறைவு கொண்டுவள ருமைக் குழந்தை தமிழ்
மொழிக்கும்
வேண்டும் பதவி தருஞ்சைவ சமய வழிக்கும் விருப்புடனே
நீண்ட பணிகள் பலசெய்து நிமல னருளாற் பொருணுள்மற்
றீண்டு பேறு பலபலபெற் றினிது வாழ எத்துவமே.

மழவராயனேந்தல், சங்கீத சாகித்திய வித்வான்

**பிரம்மஸ்ரீ சுப்பராமய்யர் (ராமதாத்தா)**

என வழங்கும்

## இராமசாமி ஐயர் அவர்கள்

**பாடியது**

---

திருவிடை யோங்கிக் கழனியில்மேவும்
திருநெல்லை வளத்திடும் தண்ணீர்
பெருகிடும் மலைநின்று நிமையாயிந்தப்
பேருல கினைவளர்த் திடல்போல்
திருவிடை யாபட்டியெனும் நற்கழனித்
திருநகர் தனில் திருநெல்லைக்
குரியநற் கணவனுகிடும் தண்ணீர்
மலையினு னெடுமஸ்ளங் கிடும்நாள்

நெற்பயிர்தனையும் நிலைக்கவப் பயிரை
நிற்றலும் வளர்த்திடும் தன்ணீர்
பற்பலநாளிற் பெருகிடக் கதிர்கள்
பரப்பிடும் பானுவைப் போல
கற்புயர் திருநெலைத் தண்ணீர்
மலையான் கண்டுவந்திடக் கதிரேசன்
நற்பெயர் தியாக ராஜனென்
றோங்கும் நன்மகவென வவதரித்தான்

உலகினி லுயிரை வளர்த்திடும்தாது
வொப்பிடத் தாதுவாண் டினிலே

கலையுயர்த் தமதிப் பங்குனிப் பங்குனி
கதிர்மதி ஸ்திரமுறும் நாளில்
இலகுமோ ருடுவும் ரேவதி துலாவி
லக்கினம் திதியமா வாசை
நலமுறு நாளில் நங்கதி ரேசன்
நாற்றிசை யோங்கிட வுதித்தான்.

உதித்தவச்செல்வ னுலகில் நற்கல்வி
யோங்கிடுஞ் செல்வமு மடைந்து
மதிப்போடு நிலைதீர்க் காயுளும் பெற்று
வாழ்ந்திட வம்மக வடைந்த
நிதித்திறத் தண்ணீர் மலையான் மனைதிரு
நெல்லையோ டனுதினம் வாழ்கக்
கதித்திட வவர்கள் வளர்த்தகல் வியுடன்
கண்யமா முலகுவாழ்ந் திடவே!

---

### காரைக்குடி சிவநேசச் செல்வர்

### திரு. சேவு. மெ.

## மெய்யப்ப செட்டியார் அவர்கள்

### வாழ்த்துரை

---

திருவளர் காரைக் குடிவளர்ந் தோங்க
அருள்வளர் வடபால் அழகுறு முத்துப்
பட்டின மதனில் பட்டின சாமியார்
மரபினில் வந்த மாண்புறு செல்வன்

தண்ணீர் மலையான் தகைபெறு தலைவர்
அன்னவர் துணையா மமைந்த நற்செல்வி
பெண்ணி னல்லாள் பெட்பார் திருநெலை
கண் ணுறு மணியாய் களிக்க வந்துதித்த

கதிரேச னென்னும் கனிதகு புதல்வன்
பனிமதி புனைந்த படர்சடைக் கடவுள்
நனிபே ரருளால் நலனெ லாம்பெற்று
தேசநற் பணியும் செந்தமிழ் தொண்டும்

நந்தன வணிகர் நலம்பெறு வழிகள்
யாவும் வளர்க்க அவாவுறு மணியாய்
தியாகராஜ னெனத் தரணியோ ரழைக்க
பாரினில் நீடூழி பண்புடன் வாழ்கவே!

---

### காரைக்குடி
## பிர்மஸ்ரீ த. ராமகிருஷ்ணன் அவர்கள்
### இயற்றியது

சீர்திகழ் காரை மாநகர் மருங்கு
பேர்புகழ் முத்துப் பட்டின மதனில்
இசைமிகு இளையா த்தங்குடி கோவில்
திசைபுகு தெய்விக பட்டினத் தடிகள்
தருமரபு தழைக்க த்தரணி யிலுதித்த
திருவருட் பேருந்தி யாகரா சனெனுங்
கதிரேச ப்பெயர் கொள்கண் மணியை
மதிசேர் தண்ணீர் மலையான் றனக்கும்
அன்னவ ன்றுணைவி அறனும் அன்பும்
மன்னவர் மதிக்கும் மாண்புறு மதியும்
தன்னல ம்பேணுக் தகையுடை திருநெலை
பன்னலம் பயக்கப் பாரினில் தாதுவாம்
பால்குன மதிஇருப த்தோடெ ட்டாம்
மால்நிறை காரிநன் னாளில்மகி ழுறஈந்த
கதிரேச செம்மல் கதிரவன் றிரிதரு
உலகிடை மக்கள் அறிவொளி பரப்ப
உலேவின்றி த்தாழா துழைத்தி டுதிறனு
மதியும் நிதியும் மாண்புறு கல்வியும்
துதிசேர் புகழும் தோற்றமும் பொலிந்து
தன்னுட தனிற்றன் மொழி தன்கலே
பன்னுளோ ங்கிடப் பணிபல இயற்றி
வாழ்க! பல்லாண்டு, வாழ்க! பல்லாண்டு
வாழ்க! நின்னறிவு, வாழ்க! நின்றிறன்
வாழ்க! நின்றிரு, வாழ்க! நின்னுயுள்
வாழ்க! நின்மொழி, வாழ்க! நின்கலே
வாழ்க! நின்னுடு, வாழ்க! நின்னரசு
வாழ்க! சுதந்திரம், வாழ்க!! வாழ்க!!!

## தூர்வாசபுரம் கவிபால சாஸ்வதி

## ந. வேற்சாமிநாதக் கவிராஜர்

## இயற்றியது

---

திருவளர் தென்தமி ழார்தென் றிசையிற்
பொருவளர் மூவர சாள்கையிற் புகழ்மிகு
பாண்டியன் நாட்டிற் பல்வள மோங்கி
வேண்டிய நல்கும் மேலார் காரைக்
குடியெனும் நகர்க்குக் குபேரன் திக்கின்
மிடியை நீக்க விளங்கு முத்துப்
பட்டண மதனிற் பாவலர் புகழும்
பட்டினச் சாமி பண்பார் மரபில்
மணிதன மகுட வணிகர் குலத்தின்
மணியெனத் தோன்றி வளர் மெ. சு. தி. யெனும்
பேரார் விலாசம் பிறங்கிடத் தோன்றி
சீரார் கல்வி செல்வம் அன்பு
உலகோர் புகழு முத்தம குணங்கள்
நிலவுந் தண்ணீர் மலையான், நெல்லைக்
கொண்டெண் நான்கு கோதி லாதறம்
விண்டலம் புகழ மேலாய் நடாத்திய
காரணத் தால்நெல் லையெனுங் கவின்பெயர்
பூரண மாகப் பொருந்துமு மைக்கென
நினைத்தோ! வதுபோல் நீளற மாகு
மனைத்துஞ் செய்ய அகமதின் நினைத்தோ
திருநெல் லையெனச் செப்பு பெயராள்
வருவெலை தெரிந்து வாழ்க்கை நடத்துவாள்
தனைமனை யாகத் தான்கொண் டான்பினும்
அனைநிகர் திருநெல் லையெனு மன்னையும்
தண்ணீர் மலையா னெனும்பெயர்த் தந்தையும்

பண்ணி னேர்மொழி பாகனைப் போற்ற
அன்னு னருளால் தாதுஆண் டதனின்
பொன்னுர் பங்குனி போற்றுநா லேழ்நாள்
பங்கு வாரம் பானும் மதியும்
தங்கு திதியிற் தனியிரே வதியுடு
தன்னிற் பூவிற் தாளெரு பூவாய்
மின்னி மைந்தனுய் மேலோர் மதிக்க
அரும்பை மலராய் ஆக்கு பானுபோல்
பெரும்புகழ் தோன்றும் பெற்றியால் நினக்குக்
கதிரே சன்னெனக் கவின்கொள் பெயரும்
நிதியைக் கொடுக்கும் நின்கரம் நீள்தலாற்
தியாகரா ஜன்னெனச் செப்புமோர் பெயரும்
தயாள குணமிகு தந்தைதாய் அழைக்கப்
பெற்ற நினக்குப் பெருமை தங்கிட
பெற்றவ ருற்றவர் பிரியம தாக
வெகுதா ன்யமதின் மீன மொன்பதில்
தகுயிரே வதியிற் சாத்திர முறைப்படி
இரண்டாம் ஆண்டு விழாவை இன்பமாய்
திரண்ட ஆயுளும் செல்வமுங் கல்வியும்
ஊக்கமும் அழகும் உயர்நன் நடையும்
வாக்கும் ஓங்க மதித்து நடத்தினர்
வாழ்க என்றும் மாதா பிதாவுடன்
வாழ்க மதிகதி ருளநாள் மகிழ்ந்தே.

---

## வித்வான் ஸ்ரீ சு. சிதம்பரமய்யர் மாணுக்கர்

## காரைக்குடி

# ஸ்ரீ சி. முரு. நாராயணன் செட்டியார்

## இயற்றிய அகவற்பா

---

சீர்பெறு காரைத் திருநகர் தன்னில்
பேர்பெறு முத்துப் பட்டினத் துள்ளே
தோணியி லேறித் துலேகளுக் கேகி
வாணிபம் செய்யும் வணிகர் மரபினில்
இளேயாத்தக் குடியெனும் எழில்பெறு கோயில்
பட்டின சாமியாம் பணமிகு வகுப்பினில்
சாத்தப்ப னென்னும் தனிக்குல மதனில்
ஏத்திய விளக்காய் எங்கணும் தெரிவோன்
ஒப்புயர் வுற்ற உத்தமப் பெரியோன்
பிறர்க் குபகாரம் பெரிதெனச் செய்வோன்
ஒழுக்கமும் கல்வியும் உயர்குண நிலேமையும்
அமைவுறப் பெற்ற அறிவுடை யாளன்
சுப்பிர மணியனும் துதிபெறு சீலன்
தனக் கிசைவுற்ற சற்குண நங்கை
திருநெல் லேயெனுந் திகழ்பெறு மாதை
நறு மணமாக நன்னுள் மணந்து
காத லிருவர் கருத்தொரு முகமாய்
திரைகடல் கடந்து செல்லலாம் இருவரும்
தரைதனில் என்று சகலரும் தேர்ந்திட
இலங்கைத் தேசமும் எழில்மிகு மலாயும்
கலங்கா மனத்தால் களிப்புடன் சென்று
இல்லற வாழ்க்கை இனிதுற நடாத்தி
வருகிற காலே மகப்பொரு ளாசை

கொண்டு வணங்கி குமர னடியினை
நாள்தொறும் துதித்த நற்றவப் பயனால்
தாது ஆண்டினிற் சாற்றிய பங்குனி
திங்க ளிருபத் தெட்டாந் திகதி
மந்த வாரம் மாண்புறு ரேவதி
நக்ஷத் திரமாம் நலம்பெறு நாளில்
தனக்குத் தானே நிகரெனுந் தன்மையில்
மனைக்கு மணியாய் மைந்தனைப் பெற்றார்
தந்தையின் பெயரைச் சாற்றவே தியாக
ராஜனெனும் பெயர் நலமுற வைத்தார்
வைத்த நற்புதல்வன் வளம்பெற வளர்ந்து
தெய்வ அருளைத் திடமுறப் பெற்று
செல்வமும் கல்வியும் செழிப்புற வடைந்து
நல்லோ னெனப்பெயர் நாள்தொறும் ஓங்கி
தேச சேவையை திறம்படச் செய்து
பாஷாபி மானப் பற்றுளோ னாக
என்னாட் டினர்க்கும் இவன்பெயர் தெரிய
நிறைஆ யுளொடு நீண்டநாள் வாழ்க!
எல்லாம் வல்ல இறைவனை வணங்கி
வழுத்தி னன்காரை மாநகருள் ளோன்
நாராயண னெனும் நற்பெயர் பெற்றோன்
சிறியதோர் அகவலைச் செய்து வழங்கினன்
வாழ்க திருநெல்லை மங்கையும் வாழ்க!
வாழ்க தண்ணீர் மலையான் வாழ்க!
வாழ்க தியாக ராஜனும் மைந்தன்
வாழ்க மற்றுள வளங்களு மோங்கி
வாழ்க அரன்திரு மலரடி போற்றியே.

காரைக்குடி முத்துப்பட்டினம், வித்வான்

## திரு. குழ. சிங்காரவேற் பிள்ளை அவர்கள்

## இயற்றியது

---

### ஆசிரியப்பா

ஞானமிகு கல்விநலம் நம்நாட்டுப் பெண்மணிகள்
நாளும் பெற்றே
ஈனமிலா இல்வாழ்க்கை நெறிவழுவா திருப்பதற்கு
நாடு மிந்நாள்
மானமுடைத் தனவணிக மாதுதிரு நெல்லையுயர்
மாண்பு மிக்க
ஆனரெரி மாஜிஸ்ட்ரேட் டாகினரெந் நாளுமவர்
வாழ்க மாதோ.

---

அரிய பல்கலைகள் அனைத்துமு ணர்ந்த
பெரியோர் பிறந்த பெருந்தமிழ் நாட்டில்
திருவளர்ந் தோங்கிச் சிறப்புறும் பெருமை
மருவிய முத்துப் பட்டின மதனில்
சைவசன் மார்க்கம் தழைத்திட வுதித்த
தெய்விகப் பட்டினச் சுவாமிசேர் வகுப்பில்
அறனும் அன்பும் ஆழ்ந்தநுண் ணறிவும்
திறனும் படைத்த திருநெல்லை தனக்கும்

முரசறை புகழ்மலி முன்னணித் திகழும்
தரைதனிற் றகைசார் தண்ணீர் மலைக்கும்
தருமெழிற் ருது தனிப் பங்குனியில்
இருபது மெட்டும் இயைந்த நன்னாளில்
திரவாரத்தில் திகழ் அமா வாசையில்
பெருமா னருளால் பிறந்தநற் பாலன்
அச்சமில் லாண்மைக் கறிகுறியாக
மச்சத்தோ டுதித்த மங்கள விளக்கு
மதியும் நிதியும் மாண்புறு கல்வியும்
பதியன் புடைமையும் ப்யின்றிட வுதித்தோன்
துதிசேர் புகழொடு தோன்றிய இளங்கோ
கதிரேச த்யாக ராஜனும் காளை
இந்நிலம் உள்ளள விவன்புகழ் ஓங்குக!
பன்னெடுங் காலம் பாரினில் வாழ்க!
இன்னல்கள் ஒழிக! இன்பமே பெறுக!
சொன்ன சொல் மாறாத் தூய்மையோ டுயர்க!
என்றுநாம் வாழ்த்தி இதயங் குளிர்வோம்
நன்றே பெறவென நாமுரைப் போமே.

காரைக்குடி

## ஆயுர்வேத பண்டிட்

# த. கி. வேங்கடசாமி நாயுடு அவர்கள்

## பாடியது

திருமகள் மலைமகள் சீர்சால் கலைமகள்
தருமலி செல்வமும் தமிழ்வளர் புலமையும்
குன்றாக் குடியாய் குழுவிய வைசியர்
நன்றாம் வாழ்க்கையும் நல்லற மோம்பல்
என்றும் எஞ்சாத இயல் நகர் காரை
ஒன்றிய முத்துப் பட்டின வூர்புரி
தவமொரு மகன்வருந் தண்ணீர் மலையான்
நவமிகு திருநெலை நங்கை கற்பின்மணி
இருகண் ணொரு பொருளெய்து நோக்கென்ன
ஒருமித் தாற்றிய வுயர் விரதத்தால்
நீடிய வாணாள் நிறை யெழில் விளக்கம்
கூடிய தன்குலம் குன்றாக் குருமுளை
ஆகவந் துதித்த அருமைப் புதல்வன்
மாகன வானென்ன மானிலம் போற்றிடும்
காவல னாகும் கதிரேசன் றனை
சேவலங் கொடியோன் சேரைங்கரத்தோன்
கொண்டல் வண்ணன் குமரிவாழ் பாகன்
எண்டிசை காப்போர் யிசையாழ் மின்னாள்
முப்பத்து மூன்று கோடி முனிவர்
ஒப்பின் நான்முகன் உயர்மதிக் கோட்கள்
கோலமிகுத்திரு கொப்புடை நாயகி
சீலமார் பொய்சொலா மெய்யன் சேங்கையான்
முத்துவ டம்புனே முத்தா ளம்மை
எத்திசை யும்புகழ் இனியகாட்டம்மை
காக்க! நோய் பிணிகவலை யுறாமல்
மீக்குறும் செல்வம் மேன்மை
பாக்கியம் சேர்ந்து பல்லாண்டு வாழ்கவே.

# MAY KADIRESA THIAGARAJA LIVE LONG

## *On The Birth-Day*

—(o)—

[Songs by Sri. A. Kumaralingam]

---

On April Thirty Seven's balmy day
When the sun just approached the horizon
The fountain of love for Thirunellai,
Begot wisdom's spark in Kathiresan
To cheer his parents for ever,
With all his prattles so clever;

When Love and Philanthropy begot wisdom,
The Joy in Thanneermalai's Lovely home
Shall fool the seeming Pleasures of a kingdom,
And fill the air with noble epitome.
This son of God shall rule with Golden sceptre,
And add his mite to break our country's fetter.

Master Fate that gifted stage-manager,
Shall guide him well in every fair endeavour
And Bless his parents with daily shower
Of love and joy and endless honeyed pleasure;
He rules the court, the camp and e'en the Deep
He gives this life and spells eternal sleep.

Karaikudi,
12—3—39.

Dear Mr. Thannirmalai Chettiar,

Thank You for the invitation to Your Son's Birth-Day function.

Last year, I remember the birth day function was presided by me. I am indeed happy to send my greetings this year also. Your boy has a bright future. I wish him long life and prosperity. As we sow, so we reap. The service to the public which you and your Noble wife are doing will have its reward as reflected in the character and future of your promising Young Son.

May Sri Koppudaiambal shower Her blessings on him.

Yours Sincerely,
T. PURUSHOTHAM,
(Municipal Commissioner.)

Colombo, 1—4—38.

Madam,

I thank you for the invitation
I wish the child all Health
Happiness and Long-life.

Yours Sincerely,
S. M. KRISHNASWAMI.
(Branch Secretary, Oriental Life Office.)

**S. SUBRAMANIAM** M. B. B. S. **Subramaniam Hospital**

KARAIKUDI,
18-3-39.

*Dear Mr. Thanneermalayan Chettiar,*

I can very well remember your son Chiranjeevi Thyagarajan making his appearance in this world. Having born inside this hospital bearing my name, I could claim that I was the first to see him born in this world. Even at his first entrance into this world, he looked bright and charming and appeared to give great promises. Having had occasion to see him often afterwards, I believe he will make a mark in this world and pray God that He will be very liberal in His Blessings in this his gift to this world.

S. SUBRAMANIAM.

COIMBATORE.
31st March 1938.

M. R. Ry.

SP. THIRUNELLAI,

M. S. T. THANNEERMALAYAN Avl.

May God Almighty grant the Child Long Life, Perfect Health and Unalloyed Happiness in the prayer of

Yours Sincerely,

*T. T. Rathnasabapathy Pillai* B. A. B. L.

(Advocate and Public Prosecutor,)

Thirunellai Thanneermalayan, Muthupatnam, Karaikudi.

Kyaiklat.
1st April 1938.

Heartiest congratulations and best wishes.

NEELAVATHI
RAMASUBRAMANIAM.

V. Ramanathan,
Devakottai.

Colombo.
30th March 38.

Mr. & Mrs. Thannirmalai Chettiar,

Thanks. Most heartily do I congratulate SELVAN THIAGARAJAN on his birth day celebration and wish him a peaceful and happy life. May the All Powerful Almighty shower on him His choicest blessing is the sincere prayer of (My kissings to The Baby.)

Your loving friend,
*V. Ramanathan.*

பொதுநலம் பேணும்!

தகைசால் அன்பரே!

*நலம் தங்கள் இல்லறத்தின் நன்கலமாக பிறந்துள்ள திருவளர் செல்வன் கதிரேச தியாகராஜன் ஆண்டு நிறைவு விழா சிறப்புடன் நடைபெறுவதாக.*

*தண்ணீர்மலையான் தம்பதிகளின் புண்ய புத்திரனென கொண்டாடப்பெறும் நமது கதிரேசன் சகல ஐஸ்வரியங்களையும் பெற்று தாய்நாட்டில் திலகம்போல் வாழ எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.*

*தங்கள் அன்பன்,*
அ. சேஷாத்திரி சர்மா.
*ஆசிரியர் "செட்டிநாடு."*

வாழ்க தியாகராஜா!

---

PANDITHAMANI
**M. KATHIRESA CHETTIAR,**
Lecturer in Tamil,
ANNAMALAI UNIVERSITY.

Annamalai Nagar,
21—3—1938.

திருமிகு,

திருநெல்லை தண்ணீர்மலையானவர்கள்,
காரைக்குடி.

அன்புடையீர்!

"மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன், நன்கல னன்மக்கட்பேறு," என்று பெரியார் கூறியபடி நுங்கள் இல்லறக்கிழமைக்குத் திருவருள் உதவிய பேறாகப் பிறந்த நன்மகனுக்கு நடைபெறும் ஆண்டுவிழாவிற் கலந்து வாழ்த்துவதிற் பெரிதும் உவகையுடையேன். அறிவும் பொதுநல நாட்டமும் உடைய நுங்களுக்குக் கிடைத்த புதல்வற்பேறு குறித்துப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன். குழந்தைக்கு நீண்ட வாழ்நாளையும் பிறநலங்களையும் இறைவன் அருள்வானாகவென வேண்டுகின்றேன். பரீக்ஷை முடிந்ததும் மகிபாலன்பட்டிக்கு வருவேன். கூடுமானால் குழந்தை அப்தபூர்த்திக்கு வர முயல்வேன்.

அன்புள்ள,
மு. கதிரேசன்.

தேவகோட்டை;
குமார ஜமீன்தார்.
1—4—1938.

அன்பர்,
மெ. சு. தி. த. அவர்கட்கு,

இன்று தங்கள் குழந்தை தியாகராஜனின் ஆண்டு நிறைவு விழாவிற்கு வர ஆவல் அதிகம் இருக்கிறது.

தங்கள் குழந்தை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ச்சியுடன் இனிதுவாழ ஆண்டவன் அருள்புரிவானாக. இத் தகவலை தங்கள் மனைவியாருக்கும் என் சார்பாகத் தெரிவியுங்கள்.

தங்கள் அன்பன்,
அள. அரு. சோமநாதன் செட்டியார்.

MTT. V.
KYAUKTAW.

ஈஸ்வரஸ்ரீ பங்குனிமீ 11உ
(24–3–38)

நண்பர், தண்ணீர்மலை அவர்கட்கு

தங்கள் செல்வப்புதல்வனுக்கும், வருகிற 19உ ஆண்டு நிறைவு விழா நடப்பதும் ரெம்ப மகிழ்ச்சியே. அதுவும் ஆடம்பரமில்லாது, சிக்கன முறையில் நடத்துவதும் நல்லது தான். தங்கள்போன்ற சீர்திருத்த இளைஞர்கள் முன்வந்து வழிகாட்டியாக செயலளவில் நடத்திக்காட்டவேண்டியது மிக்க அவசியம். தாங்கள் எண்ணியதுபோல் இனிது நிறைவேறும்படி இறைவன் அருள்புரிவாராக.

தங்கள்,
முத்த. வெ. சொ.
கெவுத்தோ

காரைக்குடி, 22—3—38.

தண்ணீர்மலை திருநெல்லை தம்பதிகளின் தனிப்பெருஞ் செல்வனுன திருவளர்செல்வன் கதிரேசனுக்கு என் நல் வாழ்த்து உரியதாகுக! நல்லறிவும் நல்லன்பும் நனிசிறப்ப தாக! கதிரேசன் களிப்புடன் வாழ்க!

அன்பன்,

(வித்வான்) அரு. சோமசுந்தரன்,

உயர்திரு சென்னை. 30—3—38

**திருநெல்லை தண்ணீர்மலையானவர்கள்,**

அன்புள்ள தோழர்களே!

செல்வன் தியாகராஜனது முதலாவது ஆண்டு நிறைவு விழாவுக்கு வர இயலவில்லை.

வெற்றிகரமாக நடைபெறுவதாக! செல்வன், பெயருக் கேற்ப தியாகத்துக்கே ராஜனுக விளங்கி நீண்ட நாள் வாழ்ந்து எல்லா இன்பங்களையும் பெறுவானுக.

தங்கள் அன்பன்,

மெ. சி மாணிக்கவாசகன்.

ராஜேந்திரா பிலிம்கம்பெனி லிமிடேட் மைலாப்பூர்,

RM. S. M. கதிரேசன் கொழும்பு
30—3—1938

திரு. மெ. சு. தி. தண்ணீர்மலை யவர்கள்

அன்புடையீர்!

செல்வன் தியாகு நீடுவாழ இறையருள்க.

புதுமை கருதி ஆண்டு நிறைவுவிழா நடத்தத் துணிந்த நுங்கட்கும் சகோதரி திருநெல்லையார்க்கும் எனது நன்றி.

அன்புள்ள,

மெ. கதிரேசன்.

தேவகோட்டை,
அரு. லெ. வெ.
நடராஜன் செட்டியார்.

தெற்கு வீடு,
Camp கோயம்புத்தூர்
20—8—39.

பேரன்புடைய சகோதர!

நலம். நமது சிரஞ்சீவி கதிரேச தியாகராஜனும் தங்கள் குடும்பமும் எல்லா நலனும் பெற்றுவாழ இறைவன் கருணை புரிவாராக.

தங்கள் நண்பன்,

**நடராஜன்.**

**M. SHINNIAH CHETTIAR.**

"Thiagaraja Vilas"
MAHIPALANPATTI,
2—4—38.

சகோதரி!

## திருநெல்லை அவர்கட்கு

குழந்தை நீண்ட ஆயுளும் எல்லா நலன்களும் பெற்று சுகசீவியாய் வாழ்தல் வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

தோழர் தண்ணீர்மலையான் அவர்களுக்கும் எனது செய்தியைச் சொல்லுக.

தங்கள் அன்புள்ள,

மூ. சி.

**சோம. இராமநாதன்,**

தேவகோட்டை.
25-3-38

நண்ப!

நலம். திருவளர்செல்வன் கதிரேசன் நீண்ட வாழ் நாளும் திடகாத்திரமும் திரண்ட செல்வமும் நிறையப் பெற எல்லாம் வல்ல இறைவனை பிரார்த்திக்கின்றேன்.

கொழும்பு கிராண்ட்பாஸ் ரோடு லுக்மான்ஜி ஸ்கொயர் எங்கள் இல்லத்தில் தாங்கள் தங்கள் துணைவியாருடன் தங்கியிருந்த நன்னாள் என்றும் என் நினைவிலுண்டு.

தங்கள்,
சோம. இராமநாதன்.

அன்புள்ள, திருச்செந்தூர்,

**தண்ணீர்மலை அவர்கட்கு** ஈஸ்வர மாசி 8.

பேரன்புடைய சோதரரே, அனந்த வந்தனம்.

சிறியேனும் சிறியேன் துணைவியும் மிக மகிழ்ந்தோம். திரு. கதிரேசன் ஜன்மதினம் முருகன் அருளால் சிறப்புற நடைபெறுக. அவன் நீடுவாழ்க. அவனுக்கு நடைபெறும் ஜன்ம நக்ஷத்திர விழா சிறியேன் குடிசையில் நடைபெறும் ஜன்ம விழாப்போல் மகிழ்ச்சி அளிக்கிறது.

திரு. அம்மையார் அவர்கட்குச் சிறியேன் வந்தனத்தைச் சொல்லக் கேட்டுக்கொள்கிறேன்.

அன்பன்,

**மு. கிருஷ்ணன்.**

To

Sri M. S. T. Thannirmalaian Chettiar,
Muthupattanam.

V. R. LINGAM,
Artist.

நாமக்கல் 5—3—38

அன்பார்ந்த தண்ணீர்மலை அவர்களுக்கு

வந்தனம். நான் ஹரிபுரா போயிருந்து நேற்றுதான் இங்கு வந்தேன்.

இத்துடன் திரு. கதிரேசன் ஆண்டு நிறைவு விழாவிற்கு வாழ்த்துப்பாக்கள் அனுப்பியிருக்கிறேன். பெற்று மகிழ்க! அவனுக்கென்று பாட்டுகள் நன்றாக அமைந்தனபோலும்! அவனும் கவிகளை ஆதரிக்கும் ஆர்வமுள்ளவனாகப்பெரு வாழ்வு பெறவேண்டுமென்று ஆண்டவனை வேண்டிக்கொள்ளுகின்றேன். தங்கள் பத்தினியார் திருநெல்லையாச்சியர்க்கும் என்னுடைய வந்தனைகளைச் சொல்லவேண்டும்.

தங்களன்புள்ள,

**வெ. இராமலிங்கன்**

புதுக்கோட்டை ஸ்டேட்

கவிபூஷணம் டாக்டர் P. K. வெங்கடேசம்,

B. Sc. A., L. M. S., L. D. Sc., L. O., &c.

கவி மா[illegible]

---

जयतु गुणधनेशो वैश्यवर्यो गिरीशः
　जयतु च तिरुनेल्लैपूतनाम्नी नयज्ञा ।
जयतु जयतु तस्यास्तस्य च प्रेमपात्रं
　स जयतु कदिरेशस्त्यागराजप्रभावः ॥

चन्द्रोदये चन्दनवारिशीते
　नन्दन्ति चाब्धिर्जनकैरवाणि ।
तथैव चन्द्रे कदिरेशनाम्नि
　तुष्यन्ति सर्वे जनकौ वयं च ॥

मार्कण्डतुल्यबहुवत्सरदीर्घमायुः
　अनामयं धान्यधनायतिश्च ।
विद्याऽनवद्या भुवनेषु कीर्तिः
　भूयासुरेवं कदिरेशसूनोः ॥

के वेङ्कटेशभिषजा कविभूषणेन
　गार्ड्यन् धनाय समितेः परिपालकेन ।
दत्ताऽद्य पद्यसुमनःकमनीयमाला
　धन्याय वैश्यकुलदीपवरात्मजाय ॥

S. V. V. Press, Srirangam.

 

## எங்கள் நன்றி

எங்களது மகன் திருவளர் செல்வன் கதிரேச தியாக ராஜனது ஜென்மவிழாவை முன்னிட்டு, வாழ்த்துக்கள் நல்கிய பெரியோர்கட்கு எங்கள் மனமார்ந்த நன்றி உரியதாகுக!

தங்கள்,

சுப. திருநெல்லை.

மெ. சு. தி. தண்ணீர்மலை.

காரைக்குடி.

## மகாத்மா காந்தியடிகள் உருவச்சிலை திறப்புவிழா.

செஞ்சை முனிஸிபல் ஸ்கூல் காரைக்குடி.



திறப்பாளர், ஸ்ரீ டி. புருஷோத்தம முதலியாரவர்கள்,

நன்கொடையாளர், ஸ்ரீ திருநெல்லை, தண்ணீர்மலை அவர்கள்.

